பதிவு எண் எம்.8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 12 மதுரை 5—9—74 வியாழன் மலர் 207


...ளாசுகள்

...ப போட்டி:

...கப்பதக்கம்

டெஹ்ரான், செப். 2—
...ஆசியா விளையாட்டுப் போட்டி
...ப்பதக்கங்களைப் பெற்றுள்ளது.

...க்கான 'வாலிபால்' போட்டியில் இந்...யையும், பெண்களுக்கான வாலிபால் ...ரான் அணியையும், சீன அணிகள் தோற்... தங்கப்பதக்கங்களைத் தட்டிச் சென்றன.

## மின்சாரத் திருடர்கள்

கான்பூர், செப். 3—

உத்திரப்பிரதேசத்தின் பெரும் தொழிற்சாலைகள் கோடிக்கணக்கான மதிப்புள்ள மின்சாரத்தை திருடியுள்ளன. இதனுல் மார்ச் மாதத்தில் மட்டும் 27 தொழிற்சாலைகளுக்கு மின்சார நிறுத்தம் செய்யப்பட்டது. எனினும் அரசாங்கம் அத்திருட்டு முதலாளிகளோடு சமரசம் செய்து கொள்கிறது. இத்திருட்டுக்கு மின்வாரிய உயர் அதிகாரிகளே உடந்தையாம்.

### "வேலியே பயிரை மேய்கிறது"

# இந்திராகாந்தி பண்ணையிலேயே கூலிச்சட்டத்தைஅமுலாக்கமறுப்பு

## நிரேன்கோஷ் அம்பலப்படுத்துகிறுர்

புதுடெல்லி, செப். 3—

**பிரதமர் இந்திரா காந்தி, பாதுகாப்பு அமைச்சர் ஜகஜீவன்ராம் போன்ற, சமுதாய அந்தஸ்தின் உச்சியில் இருக்கும் பெரிய மனிதர்களின் தோட்டங்களில் வேலைசெய்யும் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச கூலிகூட மறுக்கப்படுகிறது என்றும்- அச்சட்டப்படி கூலியும், உரிமையும் கொடுக்குமாறு கோரும் அத்தொழிலாளர்களை, அப்பெரியமனிதர்கள் தங்கள் கையில் உள்ள போலீசைக் கொண்டு மிரட்டுகின்றனர் என்றும் தோழர் நிரேன்கோஷ் அம்பலப்படுத்தினுர்.**

**ராஜ்யசபாவில் செப். 2-ல் பேசிய தோழர் கோஷ் மேலும் பேசியதாவது:—**

அவர் மேலும் பேசுகையில் "டெல்லியின் மெஹ்ரா பகுதியில் பரந்து கிடக்கும் செழிப்பான நிலத்தில் 500 பண்ணைகள் உள்ளன.

### பெரும் புள்ளிகள்

4 ஏக்கர் முதல் 500 ஏக்கர் வரை உள்ள அப்பண்ணைகளின் சொந்தக்காரர்கள் 500 பேரும் சமுதாயத்தில் மிகமுக்கியமான புள்ளிகள். உயர்ந்த அந்தஸ்தில் உள்ளவர்கள்', என்று குறிப்பிட்டார்

### யார் அவர்கள்?

"அத்தகைய பெரு மனிதர்கள், அரசியலில் உயர்ந்த அந்தஸ்தில் உள்ளவர்கள். தங்களது பண்ணைகளில் வேலை செய்யும்தொழிலாளிகளுக்கு குறைந்த பட்ச சட்டத்தைக்கூட அமுல்நடத்துவதில்லை. அத்தகைய நபர்கள் யார் யாரென்ருல் பிரதமர் இந்திரா காந்தி, பாதுகாப்பு அமைச்சர் ஜகஜீவன்ராம், லண்டனில் இந்தியாவின் ஹைகமிசனராக இருக்கும் பி கே. நேரு, தொழில் அதிபர்கள் பரத்ராம், சரத்ராம், மைசூர், மேற்கு வங்க முன்னுள் கவர்னர் தர்மவீரா, முன்னுள் நாடாளுமன்ற சபாநாயகர் ஹுகும் சிங், விமானப் படைதளபதி அர்ஜன்சிங், ஜெனரல் தாபர், ஜெனரல் வாடலியா, பாரதிய கிராந்தி தளக் கட்சியின் தலைவர் ஓபராய் ஆகியோர் ஆவர் என்றும் சுட்டிக்காட்டி தோழர் நிரேன்கோஷ் இப்பெரிய மனிதர்களின் முகத்திரையைக் கிழித்தார்.

### பார்லிமெண்டுக்கு அருகிலேயே

மேலும் "இப்படிப்பட்ட கேவலமான ஊழல்கள் அதுவும் இந்த நாட்டின் பிரதமர் இந்திராகாந்தி, ஏனைய ஏராள அமைச்சர்கள், சமுதாயத்தில் உயர்ந்தவர்களாக கருதப்படும் பெரும் புள்ளிகள் சம்பந்தப்பட்ட இப்பெரும் ஊழல்கள்எங்கே நடக்கிறது.

மக்களின் பிரதிநிதிகள்என மக்களால் அனுப்பப்பட்ட நாடாளுமன்ற உறுப்பினர்கள் கூடும் நாடாளுமன்றத்திற்கு அருகிலேயே நடைபெறுகிறது என்றும் தோழர் கோஷ் சுட்டிக்காட்டினுர்.

### உரிமைகளை மறுப்பதேன்?

மேலும் "அப்பண்ணைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் நாள் முழுவதும் ஓய்வில்லாமல் வேலை செய்கிறுர்கள். குறைந்தபட்ச கூலிச் சட்டமோ, காண்ட்ராக்ட்தொழிலாளர்களுக்கே நாள் ஒன்றுக்கு 5 ரூபாய் அல்லது மாதச் சமபளமாக 150 ரூபாய் கொடுக்குமாறு கூறுகிறது. ஆனுல் அப்பண்ணைத் தொழிலாளர்களில் விதிவிலக்கான ஒரு சிலருக்கு மட்டுமே அக்கூலி கொடுக்கப்படுகிறது.

பெரும்பகுதித் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்சக் கூலிக்கு குறைவாகக் கொடுப்பதுடன் நாள் முழுவதும் கடுமையாக வேலை செய்யுமாறு வற்புறுத்தப்படுவது மட்டுமல்லாமல் அச்சட்டத்தில் கூறப்பட்டிருக்கும் ஓவர்டைம் வேலைக்கு கொடுக்கவேண்டிய ஒன்றரைமடங்கு கூலிஉயர்வும் மாதாந்திர விடுமுறைகள் போன்ற உரிமைகள் அனைத்தும் அச்சமூக அந்தஸ்தில் உள்ளவர்களால் மறுக்கப்படுகின்றன" என்றும் தோழர் கோஷ் சுட்டிக் காட்டினுர்.

### போலீசைக் கொண்டு மிரட்டல்

மேலும், "ஆனுல் தற்போது 34-வயது கொண்ட திருமதி பிரோமில்லா லேவிஸ் என்ற ஆங்கிலப் பெண், பால்பவானில் ஊழியராக உள்ள மிஸ் ஸ்ரீலதா சுவாமிநாதன் ஆகிய இருவரின் முயற்சியால் அப்பண்ணைத் தொழிலாளர்கள் சங்கமாக ஒன்றுபட்டுகிறுர்கள். குறைந்தபட்சகூலியும் சட்டப்படி கூலியும் உரிமைகளும் வழங்குமாறு அங்கிலச் சொந்த காரர்களிடம்கேட்க ஆரம்பித்துள்ளார்கள். சமுதாயத்தின் உயர் அந்தஸ்தில் உள்ள அப்பண்ணைச் சொந்தக்காரர்களுக்கு கடிதங்கள் எழுதப்பட்டன.

ஆனுல், அவர்களில் ஒருவ கூடபதில் போடவில்லை. பிரதமர் இந்திரா காந்திகூட பதில் தெரிவிக்கவில்லை அத்தொழிலாளர்களுக்கு எனவே அவர்கள் தங்கள் உரிமைகளைக்கோரிகோர்ட்டிற்கு சென்றுள்ளனர்,

ஆனுல் அந்தஸ்தின் உச்சாணிக்கொம்பில் இருக்கும் இப்பெரிய மனிதர்கள் தங்கள் கையில் இருக்கும் போலீசைப் பயன்படுத்தி அத்தொழிலாளர்களை 'மிரட்ட ஆரம்பித்துள்ளனர்" என்றும் தோழர் நிரேன்கோஷ் குற்றஞ்சாட்டினுர்.

## ...ட்டம் பாய்ந்ததெல்லாம் எவர் மீது ?

"அரிசியைப் பதுக்கிக், கள்ள மார்க்கெட்டில் விற்பவர்கள் மீது தயவு தாட்சண்யமின்றி சட்டம் பாயும். இது, இறுதி எச்சரிக்கை!"— என்று முதலமைச்சர் கருணுநிதி கூறியுள்ளார்.

"சட்டம் பாயும்" என்னும் சொல்லிலுள்ள வேகத்தைப் பார்த்தீர்களா! எல்லாம் வேஷம்! இதற்கு முன்பும் கருணுநிதி, இப்படி "சட்டம் பாயும், "சட்டம் பாயும்" என்று பலமுறை எச்சரித்திருக்கிறுர். ஆனுல் எந்தப் பதுக்கல்காரர் மீதும் — சட்டம் பாய்ந்ததாகக் காணுேம்.

"நாங்களும் பதுக்கலைக் கைப்பற்றி விட்டோம் பார்" என்று மக்களை ஏமாற்ற, இங்கொன்றும் அங்கொன்றுமாக "ஓரிரு இடங்களில் அதிகாரிகள். பதுக்கலை — சிறிய அளவிலேயே கைப்பற்றினுர்கள். ஆனுல் இந்தச் சமூக விரோதிகள் மீது சட்டம் **பாய்ந்ததா?** இவர்கள் வீட்டிலோ, வேறு இடங்களிலோ வேலை செய்து கொண்டிருக்கும் போதோ தூங்கிக்கொண்டிருக்கும் போதோ, இவர்களைக் கருணுநிதியின் போலீஸ் புலிகள் கைது செய்தனரா? ஒரு நாளாவது, ஒரு வாரமாவது சிறையில் தள்ளினரா? இல்லையே!

மக்களைப் பட்டினி போட்டு வஞ்சிக்கும் பதுக்கல்காரன் ஒருவனையாவது போலீஸ் லத்திததடி ஒரு முறையாவது 'ருசி' பார்த்ததா? ஆனுல், பதுக்கலை எதிர்த்துப் போராடிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகள் மீது தான் கருணுநிதியின் சட்டம் பாய்ந்தது! லத்தித் தடி ருசி பார்த்தது.

மதுரையிலும், சென்னையிலும், கொள்ளை விலைக்கு விற்ற அரிசியை குறைந்த விலைக்கு மக்களே அளந்து கொண்டபோது, அவர்களுக்கு ஆதரவாக ஒழுங்குபடுத்தச் சென்ற மார்க்சிஸ்டுகள் மீது தான் கருணுநிதியின் சட்டம் பாய்ந்தது! மதுரை மாவட்டத்தில் நூற்றுக்கணக்கில் கைதாகினர்.

பதுக்கலையும் கொள்ளை விலையையும் எதிர்த்துப் போராடிய மார்க்சிஸ்டுகளை கருணுநிதி அரசு இரு வாரங்களுக்கு மேலாக சிறையில் பூட்டியது. இரவில் தூங்கிக் கொண்டிருந்த போதும் பகலில் வேலை செய்து கொண்டிருந்த போதும், தோழர்களை கைது செய்து கொண்டுபோய்ச்சிறையில் தள்ளியது. கொள்ளை வழக்குப் போட்டுள்ளது அவர்கள் தற்போது விடுதலை கூட செய்யப்படவில்லை; ஜாமீனில்தான் விடுதலை செய்யப்பட்டுள்ளனர். அதுவும் பலர், சொந்த ஊரிலில்லாமல் வேற்றூரிலேயே தங்கியிருக்க வேண்டுமென்ற நிபந்தனை ஜாமீன் பேரில்!

ஆக, கருணுநிதியின் சட்டம் யார் மீது பாய்கிறது? பதுக்கல்காரர் மீதா? பதுக்கலை எதிர்த்துப் போராடுவோர் மீதா?

பதுக்கல்காரர்களுக்கு இறுதி எச்சரிக்கை விடுவதாகக் கூறுவதெல்லாம், மக்களை ஏமாற்றும் ஒரு நாடகமே!

மக்களே, இப்படிப்பட்டவர்களை இனம் கண்டு கொள்வீர்!

### மகாராஷ்டிர முதலமைச்சரைச் சுற்றி

# பெண்கள் முற்றுகை

## விலைவாசி உயர்வை எதிர்த்து ஆர்ப்பாட்டம்

பம்பாய், செப் 2—

விலைவாசி உயர்வுக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில், மகாராஷ்டிர காங்கிரஸ் முதலமைச்சர் வி. பி. நாயக்கை பெண்கள் 'கெரோ' செய்தனர்.

வடகிழக்கு பம்பாயில் சாந்தா குரூஸ் எலெக்ட்ரானிக் பிராசசிங் நிலையத்தை திறந்து வைக்க நேற்றுவந்த போது 'மரோல்' எனும் இடத்தில் இந்த கெரோ நடந்தது.

'விலைவாசி உயர்வு எதிர்ப்பு மாதர் அணி, சார்பில் நடந்த இந்த 'கெரோ' போராட்டத்தில் நூறு பெண்கள் உட்பட 500க்கு மேற்பட்டோர் கலந்து கொண்டனர்.

முதலமைச்சரின் காரைச் சுற்றி பெண்கள் முற்றுகையிட்டு கூடுதல் தானியங்கள் வழங்க வேண்டும் என்றும், திருவிழா காலங்களில் அதிக சீனி வேண்டும் என்றும் விலைவாசியைக் குறைக்க வேண்டும் என்றும் முழக்கங்கள்எழுப்பினர்.

### போலீஸ் தடியடி 50 பேர் கைது

இந்த கெரோ அரை மணி நேரத்திற்கும் மேல் நீடித்தது. அதன் பின்னர் வந்த போலீசார், தடியடி நடத்தி 30 பெண்கள் உட்பட 50 பேரைக் கைது செய்தனர்.

போலீசார் நடத்திய தடியடியில் ஏராளமான பெண்களும் ஆண்களும் காயமடைந்தனர்.

போலீசாரின் தடியடியையும், கைதையும்பொருட்படுத்தாது முதலமைச்சரின் காரைப் பின் தொடர்ந்து சென்றனர். ஆனுல் ஏராளமான ரிசர்வ் போலீசார் வந்து அவர்களைத் தடுத்து நிறுத்தினர்.

### சிக்கிமிற்கு துணை நாட்டுத் தகுதி

# இந்தியாவின் நாடு சேர்க்கும் கொள்கை எனப்படும்

## பார்லிமெண்டில் ஜோதிர்மாய் பாசு

புதுடெல்லி, செப் 2—

சிக்கிம் நாட்டிற்கு இந்திய நாட்டின் துணை நாடுத்தகுதி அளிப்பதும்அதற்கு இந்திய பார்லிமெண்டில் பிரதிநிதித்துவம் அளிப்பதும்பிராந்திய ரீதியான, உலக ரீதியான சிக்கல்களை ஏற்படுத்தும் என நாடாளுமன்றத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர் தோழர் ஜோதிர்மாய்பாசு குறிப்பிட்டார்.

இந்திய வெளிவிவகார அமைச்சர் சுரண்சிங் நாடாளுமன்றத்தில்செப்2-ல் அதற்கான அரசியல் சட்ட (36 வது திருத்த) மசோதாவை பிரேரித்தபோது அதன் மீதுபேசும் போதே தோழர் பாசு அவ்வாறு குறிப்பிட்டார்.

### சட்ட நெருக்கடி

அவர் மேலும் பேசும் போது, இந்தியநாட்டிற்கு வெளியே இருந்து இந்நாட்டின் பார்லிமெண்டிற்கு உறுப்பினர்களாகஅனுமதிக்கப்பட்டால் தேவையற்ற அரசியல் சட்ட நெருக்கடியை மட்டுமல்லாமல் விடைகாண முடியாத பல பிரச்சினைகளை கிளப்பும் என்றும் தோழர் பாசு தெரிவித்தார்.

மேலும் "எந்த உறுதி மொழியின் அடிப்படையில் சிக்கிம் நாட்டு உறுப்பினர்கள் இந்திய பார்லிமெண்ட் உறுப்பினர்களாக வருகிறுர்கள்? அவர்களுக்குஇரட்டை பிரஜா உரிமை வழங்கப்பட்டுள்ளதா? இந்தியாவோடு சிக்கிம் மக்கள் இணைய விரும்புகிறுர்கள் என்ற பிரச்சினையே இருக்க முடியாது" என்ருர் தோழர் ஜோதிர்மாய்பாசு.

மேலும் சிக்கிம் நாட்டு மக்களின் தனிநபர் வருமானம், இந்திய மக்களின் தனிநபர் வருமானத்தை விட அதிகம் என்றும் அவர் குறிப்பிட்டார்.

### நாடு சேர்க்கும் கொள்கையா?

'மேலும்சிக்கிம் நாட்டினை இந்நாட்டின் துணை நாடாக்குவதும் அதற்கு பார்லிமெண்ட பிரதிநிதித்துவம்அளிப்பதும் இந்தியாவிற்கு நாடு சேர்க்கும் கொள்கை உள்ளது என்ற குற்றச்சாட்டை ஏற்படுத்தும். அதன்தொடர்ச்சியாக சர்வதேசிய சமாதானத்திற்கு பயமுறுத்தல் ஏற்படுத்தக்கூடும். மேலும் சீனத்தோடு உறவை சீராக்கிக்கொள்ளும் வழிக்கு பாதகமாக அமையும்" என்று அவர் தெரிவித்தார்,

### மதுலிமாயி பேச்சு

சோசலிஸ்ட் கட்சித்தலைவர் மதுலிமாயி பேசும் போது "சிக்கிமிற்கு இந்திய துணை நாட்டுத்தகுதி அளிக்கவும் அதற்கு பார்லிமெண்டில் பிரதிநிதித்துவம் கொடுக்கவும் வகைசெய்யும் அரசியல் சட்ட மாசோதாவின் மூலம் நாட்டில் ஏற்பட்டுள்ள பொருளாதாரநெருக்கடியை திசை திருப்ப முயல்கிறது இந்திய அரசு" என்று குறிப்பிட்டார்.

### எகிப்தின் நிலைமை

மேலும், இம்மாதிரியான விவகாரங்களில் அவசரப்பட எந்த நடவடிக்கையும் எடுக்கவேண்டாமென அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டார்.

அவசர அவசர முடிவுகளால் எகிப்துக்கும். லிபியாவுக்கு மிடையோ அல்லது எகிப்துக்கும் சிரியாவுக்கு மிடையோ ஏற்பட்ட இணைப்புகளுக்கு ஏற்பட்ட கதியையேனும் இந்திய அரசாங்கம் புரிந்து கொள்ளவேண்டும் என்று மதுலிமாயி கூறினுர்,

## உப ஜனதிபதியின் ஒரு 'மசால்' கண்டுபிடிப்பு !

நாட்டில் ஏற்பட்டுள்ள கஷ்டங்களுக்கெல்லாம் மக்கள் கடுமையாக உழைக்காததுதான் காரணம், என்று பிரதமர் இந்திராவும், 'பெருந்தலைவர்' காமராஜரும் திரும்பத் திரும்ப—கீறல் விழுந்த இசைத்தட்டுபோல் பல்லவி பாடிக் கொண்டுவந்தார்கள். அதேகருத்தையே உப ஜனதிபதி திருவாளர் ஜாட்டி கொஞ்சம் 'மசால்' போட்டு சொல்லியிருக்கிறுர்.

"நாட்டைப் பாதித்துள்ள பெரும்பாலான கஷ்டங்களுக்கு, மக்களிடையே ஏற்பட்டுள்ள ஒழுக்கமின்மைதான் காரணம்"

—புதுடெல்லியில் ஜைனர்கள் நடத்திய "தேசிய ஒழுக்க மாநாட்"டினைத்துவக்கி வைத்துப் பேசும்போதே உபஜனதிபதி, தமது இந்த 'மசால்' கண்டுபிடிப்பை அறிவித்தார்.

அவரது அபாரக் கண்டுபிடிப்பில் இலைமறைகாயாய் மறைந்துள்ள ஒழுக்கமின்மை என்ன?

பட்டினியை எதிர்த்து, விலைவாசி உயர்வை எதிர்த்து, வரிச்சுமையை எதிர்த்து சம்பள முடக்கத்தை எதிர்த்து, சுரண்டலை எதிர்த்து மக்கள் போராடுவதெல்லாம ஒழுக்கமின்மைகளாகும். அத்தகையகொடுமைகளை எதிர்த்து கிளர்ந்தெழாமல், கைகட்டி வாய்பொத்தி, பதுமையாக முடங்கிக் கிடப்பதுதான் ஒழுக்கங்களாகும்!

நாட்டுக் கஷ்டங்களின் உண்மையான காரணங்களான, விலைவாசி உயர்வு, வரிச்சுமை, சுரண்டல், பணவீக்கம், கறுப்புப் பணம், பதுக்கல், வரிடிமிக்கி — இவையெல்லாம் ஒழுக்க சீலங்களாம்! ஏனெனில், இந்த ஒழுக்கசீலங்கள், பெருமுதலாளிகளும் நிலப்பிரபுககளும் வாததகச் சூதாடிகளும், அரசாங்கமும் கூட்டாகச் சேர்ந்து நடத்தப்படுபவை!

மக்களுக்கு ஒழுக்கம் போதிக்க வந்த உப - ஜனதிபதி, இவர்களுக்கு மட்டும் ஒழுக்கம் போதிக்க மறந்தது ஏனே!

# தீக்கதிர்

## படுகுழியில் பலகோடி

ஐந்து லட்சம் பேருக்கு வேலை கிடைக்கச் செய்வோம்! வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழித்திடும் எமது புனிதப் போர் தொடங்கி விட்டது என்று தேர்தல் காலத்தில் முழங்கி இளம் சந்ததியினரின் வாக்குகளைப் பெற்றது இந்திரா காங்கிரஸ்.

தேர்தலுக்குப் பிறகு நடந்த காங்கிரஸ் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டு, பின்னர் மத்திய அரசாங்கத்தால் ஏற்பட்ட வேலையில்லாத் திண்டாட்ட ஒழிப்பு முதல் திட்டம் ஒன்றும் அறிவிக்கப்பட்டது,

இதற்காக இந்திய அரசு சுமார் 170 கோடி ரூபாய் ஒதுக்கி செலவிட்டதாக திட்ட அமைச்சர் மோகன்தாரியா நாடாளுமன்றத்தில் அறிவித்தார்.

இவ்வளவு பெரும் தொகையை செலவழித்து வேலை இல்லாது திண்டாடும் மக்களில் எத்தனை பேருக்கு வேலை தந்தீர்கள்? என்று நாடாளுமன்றத்தில் கேட்ட கேள்விகளுக்கு இதே திட்ட அமைச்சர் தாரியா, "எமது வேலையில்லாத்திண்டாட்ட ஒழிப்பு வேலை வெற்றி பெறவில்லை." என்றார்.

நடந்தது என்ன?

புதிதாக ரோடு போடுதல், அணைகள் கட்டுதல், குளம் மராமத்து செய்தல், ஆகியவைதான் வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க மத்திய அரசின் முன் முயற்சியில் மேற்கொள்ளப்பட்ட திட்டங்கள். இவைகள் முறையாக, நிரந்தரமாக வேலை வாய்ப்பு வழங்கும் திட்டங்களல்ல. சில சந்தர்ப்பங்களில், மேற்கொள்ளப்படும் வேலைகளாகும்.

இந்த வேலைகளை மேற்கொண்டபோது, இவைகளை முறையாகச் செய்ய தேவையான சாதனங்கள் வழங்கப்படாததால், நடுவழியிலேயே பல திட்டங்கள் கைவிடப்பட்டன. அதனால் பல கோடி ரூபாய் பாழ்! அது மட்டுமா?

ரூ 170 கோடியில் கணிசமான பகுதி யாருக்கு வேலை வாய்ப்பை அளிக்க வழங்கப்பட்டதோ அவர்களுக்குப் போகாமல், ரோடுகள், சிறு பாலங்கள் கட்டியதாக பினாமி பெயர்களைக் காட்டி சர்க்கார் பணத்தை பல இடங்களில் ஏப்பமிட்டு விட்டனர் என்று மோகன்தாரியாவே ஒப்புக் கொண்டுள்ளார்.

இது சம்பந்தமாக திட்டவட்டமான குற்றச்சாட்டுகள் பீகார், உத்திரப்பிரதேசம், கேரளம் ஆகிய மாநிலங்களில் இருந்து வந்திருக்கின்றன. தமிழகத்திலேயே பல இடங்களில் நல்ல பாலங்களையெல்லாம் உடைத்துப் போட்டு புதிய பாலம் கட்ட செலவழித்த பணமும் இந்த ரூ 170 கோடியில் சேரும்.

மத்திய அரசு மக்களை ஏமாற்றுவதற்காக செய்த பல சாகசங்களில் காண்ட்ராக்டர்களும், ஆளும் கட்சியுடன் தொடர்பு கொண்ட இடைத் தரகர்களும் இந்த ரூ 170 கோடியை விழுங்கி ஏப்பம் விட்டுள்ளனர்.

வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிக்கப்படவில்லை, காங்கிரஸ் கட்சிக்கு வேண்டியவர்களுக்கு நிறையப்பணம் கிடைத்தது.

இதுமட்டுமல்ல உணவுப் பற்றுக்குறையைப் போக்க தீவிர உற்பத்தியில் ஈடுபட மாநிலங்களுக்கு சென்ற ஆண்டு ரூ 200 கோடி வழங்கியது மத்திய அரசு,

ஆனால் உணவு உற்பத்தியோ முந்தைய ஆண்டைவிட இந்த ஆண்டு பெருமளவு அதிகரிக்கவில்லை. எனினும் ரூ 200 கோடியும் செலவழிக்கப்பட்டிருப்பதாக அறிவித்திருக்கிறார்கள். எவ்வாறு செலவழித்தார்கள்? அதன் பலன் என்ன? என்பதை இந்திய அரசு வெளியிட மறுக்கிறது.

இத்தகைய ஒழுங்கீனங்களையும், ஊழல்களையும் சீர்கேடுகளையும் புரிவது யார்? எந்த மட்டத்தில், எந்த ரூபத்தில் என்பதைக் குறித்து பகிரங்க நீதி விசாரணை நடத்தத் தயாரா?

---

ஊதிய முடக்கத்துக்கு

## கோவை எல் ஐ சி ஊழியர்கள் கண்டனம்

கோவை, செப் 2—

அகில இந்திய இன்சூரன்ஸ் ஊழியர் சங்கத்தைச் சார்ந்த, கோவை நகரில் பணியாற்றும் ஆயுள் காப்பீட்டுக் கழக (எல் ஐ சி) ஊழியர்கள் 29—8—74-ந் தேதியன்று திருச்சி பாதையிலுள்ள எல் ஐ சி டிவிஷனல் அலுவலகத்தின் முன்பு மத்திய அரசாங்கம், ஊதியம், பஞ்சப்படி ஆகியவைகளை முடக்கக் கொண்டு வந்துள்ள அவசர சட்டங்களை எதிர்த்தும், பாட்னா, கட்டாக் ஆகிய டிவிஷன்களை தொழிற்சங்கத் தலைவர்களை எல் ஐ சி நிர்வாகம் பழிவாங்கும் செயலைக் கண்டித்தும் மாபெரும் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

### பகிஷ்காரம்

அகில இந்திய இன்சூரன்சு ஊழியர்கள் தலைமை சங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்க, அவசரச் சட்டங்களின் விளைவாக வருகிற செப்டம்பர் மாதம் பஞ்சப்படியைக் குறைத்துச் சம்பளம் கொடுக்கும்போது அதை எதிர்த்து, ஒரு நாள் சம்பள பகிஷ்காரம் செய்யவும் மேற்படி கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

கூட்டத்திற்கு கோவைப் பகுதி இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் ஊழியர் சங்கத்தின் தலைவர் வி கோபாலகிருஷ்ணன் தலைமை வகித்தார். அகில இந்திய இன்சூரன்சு ஊழியர் சங்கத்தின் செயற்குழு உறுப்பினர் எ ஆர் கல்யாணசுந்தரம் பேசினார். தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மத்திய அரசின் ஊதிய முடக்கச் சட்டத்தை எதிர்த்து போடியில் ஆக 30-ந் தேதி பெரும் ஊர்வலமும் ஆர்ப்பாட்டமும் நடைபெற்றது.

போடிப் பகுதியில் உள்ள மின்சார ஊழியர்களும், வங்கி ஊழியர்களும் ஒன்றிணைந்து இந்த ஆர்ப்பாட்ட ஊர்வலத்தை நடத்தினர்.

ஊர்வலத்திற்கு —மதுரை முகவை மாவட்ட வங்கி ஊழியர் சங்கத்தின்பொதுச் செயலாளர் கே ராமச்சந்திரன் தலைமை தாங்கினார். ஊர்வல முடிவில், தமிழ்நாடு மின்சார ஊழியர் சங்கத்தின் மதுரை முகவை திட்ட செயலாளர் மல்லிகார்ஜுனன், மத்திய வங்கியைச் சேர்ந்த தோழர்கள் சீனிவாசன், கோபிநாத் மின்சார தொழிலாளர் சம்மேளனத்தைச் சார்ந்த முத்துக்காமாட்சி முத்துராமலிங்கம். முன்னேற்ற சங்கத்தைச்சேர்ந்த பால்பாண்டியன் ஆகியோர் பேசினர்.

---

தொழிற்சங்கத் தலைவர்களை அவமதித்த

## மின்வாரியத் தலைவர் 'ஜாக்கிரதை' என்றுகூறி மிரட்டல்

சென்னை, செப். 1—

தமிழ்நாடு மின்வாரியத் தலைவரான எம். ஜி. ராஜாராம், தம்மை முதன்முறையாக சந்திக்கச் சென்ற மின் தொழிலாளர் சங்கத் தலைவர்களை அவமதித்துள்ளார். 'போ', 'வா' என்றெல்லாம் ஆணவத்துடன் பேசியுள்ளார்.

இந்த நிகழ்ச்சி கடந்த ஆக. 21-ந் தேதியன்று நடந்துள்ளது. மின்தொழிலாளர்களது கோரிக்கைகள் சம்பந்தமாக நீண்ட நாட்களாக பல்வேறு அதிகாரிகளிடமும் பேச்சு வார்த்தைகள் நடத்தியும் எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படாததால், மின் தொழிலாளர் மத்திய அமைப்பின் பொதுச் செயலாளர் து. ஜானகிராமன், மற்றொரு முக்கியஸ்தர் ஏ.ஆர்.கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் முன் அனுமதி பெற்றுசென்றுள்ளனர். அவருக்கு வணக்கம் கூறிவிட்டு இருக்கையில் அமர்ந்தனர்.

### நடிப்பும் மிரட்டலும்

இவர்கள் அறைக்குள் நுழைந்தது தெரியாதது போல் நடித்து விட்டு நீண்ட நேரம் கழித்து, "எனக்கு கையெடுத்துக் கும்பிட்டு வணக்கம் செலுத்தினீர்களா? உங்களுக்கு மரியாதை தெரியுமா?" என்று மிரட்டியுள்ளார். தாங்கள் வணக்கம் கூறியதாகவும் தொழிலாளர் பிரச்னைகள் குறித்து பேச வந்ததாகவும் தொழிற்சங்க தலைவர்கள் கூறினர்.

மேலும், என்னிடம் எதிர்வாதம் புரிய வந்துவிட்டீர்கள். நீங்கள் இருவரும் எங்கேவேலைசெய்கிறீர்கள்? தர்ணா, போராட்டம் என்று நடத்துகிறீர்களா? என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? ஆர்ப்பாட்டம் எதுவும் நடத்தினால்வேலிபோட்டுதடுத்து விடுவேன் ஜாக்கிரதை என்று மிரட்டியுள்ளார்.

இவ்வாறு பேசுவது சரியல்ல என்று ஜானகிராமன் கூறியதற்கு "போ வெளியே" என்றுஅறையே அதிரும்படி உரக்கச் சத்தம் போட்டுள்ளார்.

இனி இவரிடம் பேசிப் பயனில்லை என்று கருதிய தலைவர்கள் வெளியே வந்து விட்டனர்.

ஒரு பொறுப்புள்ள ஐ. ஏ. எஸ். அதிகாரியான மின் வாரியத் தலைவரின் திமிரான நடவடிக்கை மின் தொழிலாளர் மத்தியில் பெரும் கொந்தளிப்பை ஏற்படுத்தியுள்ளது. மின்தொழிலாளர் மத்திய அமைப்புடன் இணைந்துள்ள அனைத்துச் சங்கங்களும்கண்டனத் தந்திகள் கொடுத்துள்ளன. கடந்த ஆக. 25-ந் தேதி கூடிய மத்திய அமைப்பின் மாநிலக்கூட்டம் கண்டனம் தெரிவித்துள்ளது.

### முதலமைச்சருக்கு சி. கோவிந்தராசன் கடிதம்

இதுகுறித்து. மத்திய அமைப்பின் தலைவர் தோழர் சி கோவிந்தராஜன் தமிழக முதலமைச்சருககு ஒரு கடிதம் எழுதியுள்ளார். அதில், மின்வாரியத் தலைவரின் இத்தகைய போக்கும் மனப்பான்மையும், சுமார் 1 லட்சம் ஊழியர்களின் பிரச்னைகளைத் தீர்ப்பதற்குப் பதில், உணர்ச்சியைத் தூண்டிவிட்டு தொழில் அமைதிக்கு ஊறுவிளைவிக்கும் என்று அச்சம் தெரிவித்துள்ளார்.

---

புதுடெல்லியில்

## அமைச்சர் ரகுநாத ரெட்டியுடன் ஏ. நல்லசிவனும் மற்ற தலைவர்களும் சந்திப்பு

### மூடப்பட்ட 100 தோட்டங்களை அரசு மேற்கொள்ள வற்புறுத்தல்

புதுடெல்லி, செப். 1—

மூடிக்கிடக்கும் தோட்டங்களை அரசே மேற்கொள்ள வேண்டும் என்று மத்திய தொழிலாளர் நல அமைச்சர் கே, வி. ரகுநாத ரெட்டியை இங்கு சந்தித்து சி ஐ டி யூ. தலைவர்கள் வற்புறுத்தினர்.

அகில இந்தியச் செயலாளர் மனோரஞ்சன் ராய், எம். பி. (மேற்கு வங்கம்), தமிழக சிஐடியூ செயலாளர் ஏ. நல்லசிவன், விமலா ரணதிவே, நஞ்சுண்டப்பா. (கர்னாடகம்) ஆகியோர் கடந்தஆக. 27-ந்தேதியன்று அமைச்சர் ரெகுநாத ரெட்டியைச் சந்தித்து மகஜர் ஒன்றை அளித்து பேசினர்,

### வற்புறுத்தல்

மூடிக்கிடக்கும் சுமார் 100 தோட்டங்களை அரசு மேற்கொள்ள வேண்டும் என்றும், தோட்டத் தொழிலாளர் சட்டத்தை எல்லாத் தோட்டங்களிலும் பூரணமாக அமுலாக்குவதற்கு உத்தரவாதம் செய்யப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தினர்.

மேலும் தேசம் முழுவதும் தோட்டத் தொழிலாளர்களுக்கு ஒரே மாதிரியான சம்பள விகிதங்கள் நிர்ணயிக்கப்பட வேண்டும் என்றும், கேரளத்தில் 1—8—74 முதல் நடைபெற்று வரும் 2 லட்சம் தோட்டத் தொழிலாளர் வேலை நிறுத்தத்தில் மத்திய அரசு தலையிட வேண்டும் என்றும் வற்புறுத்தினர்.

மகஜரைப் பெற்றுக் கொண்ட அமைச்சர் உரிய நடவடிக்கை எடுப்பதாகவும் செப் 27-ல் நடைபெற இருக்கும் மாநில தொழிலாளர் நல அமைச்சர்கள் கூட்டத்தில்மகஜர் குறித்துப் பரிசீலிப்பதாகவும் கூறினார்.

### வர்த்தக அமைச்சருடன் சந்திப்பு

இதற்கு முதல்நாள் (ஆக 26) தோட்டத் தொழில் சம்பந்தமாகவர்த்தக அமைச்சர் கே டி. மாளவியாவையும். தோழர் ஏ. நல்லசிவனும், மற்ற தலைவர்களும் சந்தித்து பேசினர்.

---

ஆசிரியருக்கு

## மின்சார வாரியத்தின் ஊதாரித்தனம்

ஐயா,

கோவில்பட்டி நகரில் மொத்தம் உள்ள தெரு விளக்குகள் 851. ஒரு லைட்டுக்கு மாதத்திற்கு ரூ.5 என லைட்டுகள் எரிந்தாலும், எரியாவிட்டாலும் கம்பங்களை எண்ணி கரண்ட் சார்ஜ் வசூலிக்கப்படுகிறது.

ஆனால் நகரில் உள்ள தெரு விளக்குகள் சரிவர எரிவது கிடையாது. நகர் மன்றமோ, மின்சார வாரியமோ கவனிப்பது இல்லை. லைட்டுகள் எரியாததை மின்சாரவாரியத்தின் உயர் அதிகாரிகளான ஜூனியர் எஞ்சினியர், அசிஸ்டண்ட் எஞ்ஜினியர் [ஜே இ.ஏ இ.] போன்றவர்களிடம் கேட்டால் வாரியத்தில் பல்பு, டியூப், சோக்கு, சாட்டர் போன்ற சாமான்கள் கிடையாது என்று பதில் சொல்லப்படுகிறது.

தமிழக அரசு நகர்மன்றங்களுக்கு மின்சாரக் கம்பங்களில் எரியும் லைட்டுகளுக்கு மீட்டர் சிஸ்டத்தில் தான் சார்ஜ் வசூலிக்கப்படும் என 9—1—74-ம் தேதி அறிவித்துள்ளதை அரசு இன்னும் அமுல் நடத்த முடியவில்லை.

தமிழக அரசு மின்சார வாரியத்திற்கு வாங்கும் டியூப், சாட்டர், சோக்கு போன்ற சாமான்கள் தரமற்றது என்று தமிழக நகர்மன்ற தலைவர்களின் கூட்டத்தில் (சேர்மன் கான் (பிரன்ஸ்) சென்ற ஆண்டு நடைபெற்றதில் பல நகர் மன்றத் தலைவர்கள் குறை கூறியுள்ளனர்.

இந்த வாரியத்தில் உற்பத்தியாகும் பெரும் பகுதி மின்சாரம் இண்டஸ்டிரியல் தொழிற்சாலைகளுக்கு வழங்கப்படுகிறது. ஒரு யூனிட் மின்சாரம் சுமார் 5½ பைசாவுக்கு வழங்கப்படுகிறது. பெரும்பாலான மின்சாரம் தொழிற்சாலைகளால் திருடப்படுகிறது என அரசு அறிவிப்பு கூறுகிறது. ஒரு தொழிற்சாலைக்கு மின் வெட்டு சமயத்தில், டீசல் மூலம் மின்சாரம் உற்பத்தி செய்ய ஒரு யூனிட்டுக்கு 63 காசுகள் செலவாகிறது. ஆனால், அரசு அவர்களுககு 5½ பைசாவுக்கு மின்சாரம் சப்ளை செய்து தொழிலதிபர்களை கொழுக்க வைக்கிறது.

அரசின் இத்தகைய முதலாளித்துவக் கொள்கையும் வாரியத்தின் ஊதாரித்தனமும் மிகவும் கண்டிக்கத் தக்கது.

எனவே, வாரியமும் அரசு அதிகாரிகளும், மக்கள்வரிப் பணத்திலிருந்து வாங்கும் சாமான்கள் தரமானதாக வாங்கி மக்களுக்கு வசதியாக நகர்மன்ற தெரு விளக்குகள் சரிவர எரிவதற்கு ஏறபாடு செய்ய கோருகிறேன்.

தங்கள்,

எஸ், வள்ளிநாயகம்.

3-வது வட்ட நகர்மன்ற உறுப்பினர்

கோவில்பட்டி.

---

## ஸ்தல ஸ்தாபன தொழிலாளர் சங்க பிரதிநிதிகள்கூட்டம்

திண்டுக்கல் ஆக 31—

தமிழ்நாடு ஸ்தல ஸ்தாபன துப்புரவுத் தொழிலாளர் சங்கப் பிரதிநிதிகள் கூட்டம் செப் 15-ந் தேதி காலை 10 மணிக்கு திண்டுக்கல் சோலைஹால் தியேட்டர் ரோட்டிலுள்ள ஆக்னிஸ்மேரி தெரு சுருட்டுத் தொழிலாளர் சங்கக் கட்டிடத்தில் நடைபெறும்.

இக்கூட்டத்தில் மாநில சி ஐ டி யூ செயலாளர் ஏ. நல்லசிவன், மாநிலத் துப்புரவுத் தொழிலாளர் போராட்டக் குழுத் தலைவர் வி கே கோதண்டராமன், செயலாளர் எஸ் ஏ தங்கராஜன் ஆகியோர் கலந்து கொள்கிறார்கள்.

### நடவடிக்கைக் குழு

மாநில நடவடிக்கைக்குழு கூட்டம் செப் 14-ந் தேதி காலை 10 மணிக்கு நடைபெறுகிறது. உறுப்பினர்கள் அனைவரும் குறித்த காலத்தில் வந்து சேர வேண்டும் என்று தோழர் எஸ் ஏ தங்கராஜன் கோரியுள்ளார்.

---

ஊதிய முடக்கம்:

## ஆட்டோ ரிக்ஷா டிரைவர்கள்எதிர்ப்பு

திருச்சி. ஆக. 31—

ஊதிய முடக்கச் சட்டத்துக்கு இங்குள்ள ஆட்டோ ரிக்ஷா டிரைவர்கள் சங்கம் கண்டனம் தெரிவித்துள்ளது.

கடந்த 24ந் தேதியன்று சங்கஅலுவலகத்தில்தோழர் ஆர், உமாநாத் தலைமையில் நடந்த மகாசபைக் கூட்டத்தில் கண்டனத் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது. மற்றும் நகரின் 7 முக்கிய இடங்களில் ஆட்டோ ஸ்டாண்டுகள் அமைக்கக் கோரியும், வற்புறுத்தப்பட்டது. சங்க வரவு-செலவு ஏற்றுக் கொள்ளப்பட்டது.

---

சம்பள முடக்கத்தை எதிர்த்து

## கேரளத்தில் பொது வேலைநிறுத்தம்

கொச்சி, செப்.1—

மத்திய அரசு கொண்டு வந்துள்ள சம்பள முடக்கத்தை எதிர்த்து செப்டம்பர் 18ந் தேதியன்று கேரளம் முழுவதிலும் ஒருநாள் அடையாள பொது வேலை நிறுத்தம் செய்யுமாறு தொழிலாளர்களுக்கு சி ஐ.டி.யூ. உள்பட பல்வேறு தொழிற் சங்கங்கள் கூட்டாக அறைகூவல் விடுத்துள்ளன. இப்பொதுவேலைநிறுத்தத்தில் ஐ. என். டி. யூ. சி. சேரவில்லை.

ஏ. ஐ. டி. யூ. சி,யும், யூ.டி யூ. சியும், பொது வேலை நிறுத்தத்தில் கலந்து கொள்ள முன்வந்ததையொட்டி, செப் 10ந்தேதிக்கு நடப்பதாக இருந்த பொது வேலைநிறுத்தம் செப்டம்பர் 18ந் தேதிக்கு தள்ளி வைக்கப்பட்டது.

ஆரம்பத்தில் கேரள வலது கம்யூனிஸ்டுகளின் சங்கமான ஏ. ஐ. டி. யூ. சி. இந்தப்பொது வேலைநிறுத்தத்தில் கலந்துகொள்வதுபற்றி எதுவும் கூறாமல் 'மௌன சாமி'யாக இருந்தது.

கேரளத்தில் காங்கிரசுடன்சேர்ந்து கூட்டுமந்திரி சபை அமைத்திருப்பதால், ஒருவேளை, பதவிக்கு ஆபத்து வந்துவிடுமோ என்ற அச்சத்தினால். பொது வேலை நிறுத்தத்தில்கலந்துகொள்ள தயங்கியது.

ஆனால், கேரள பாட்டாளிகளின் ஒன்றுபட்ட எழுச்சியைக் கண்டு அஞ்சிய ஏ. ஐ. டி. யூ. சி., தற்போது பொது வேலைநிறுத்தத்தில் கலந்து கொள்ள முன் வந்துள்ளது.

செப் 18-ந் தேதியன்று நடக்கவிருக்கும் பொது வேலைநிறுத்தத்தில் கலந்து கொள்ளுமாறு ஐ. என். டி. யூ. சி. சங்கத்திற்கும் அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது.

---

ஊதிய முடக்கத்தை எதிர்த்து

## அரசு ஊழியர் எழுச்சி நாள்

பொள்ளாச்சி, ஆக 31—

மத்திய அரசின் ஊதிய முடக்கச் சட்டத்தை எதிர்த்தும், விலைவாசி உயர்வை ஈடுகட்ட ரூ 30 இடைக்கால நிவாரணம் கோரியும் இங்குள்ள அரசு ஊழியர்கள் 'எழுச்சி நாள்' அனுஷ்டித்தனர்.

கடந்த 9-ந் தேதியன்று அனைத்து அரசு ஊழியர்களும் கருப்பு 'பேட்ஜ்' அணிந்து பணி புரிந்தனர். அன்று நடந்த ஆர்ப்பாட்ட ஊர்வலத்திற்கு பிறகு நடந்த கூட்டத்துக்கு எஸ், ராமச்சந்திரன் தலைமை வகித்தார். பல்வேறு சங்கங்களைச் சார்ந்த பொ உ ராதா, ராஜபாண்டியன், கிருஷ்ணமூர்த்தி, ஆர். வெள்ளியங்கிரி, பாண்டியன், பொ க விஸ்வநாதன், வ சித்தையன், பாரதி ஆகியோர் பேசினர்.

விலைவாசி உயர்வுக்கும், என் ஜி ஓ சங்க மாநிலத் தலைமையின் தான்தோன்றி தன்மைக்கும் கண்டனம் தெரிவிக்கப்பட்டது.

---

குறு

## பாம்புக்குப் பால் வார்த்தல்

ஊழலின் மொத்த உருவமே இந்திரா காங்கிரஸ் என்பது மீண்டுமொரு நிகழ்ச்சியின் மூலம்நாடாளுமன்றத்தில் அம்பலமாகியுள்ளது.

21 காங்கிரஸ் எம் பிக்கள் கையெழுததிட்டு புதுவையைச் சேர்ந்த சில காங்கிரஸ் வியாபாரிகளுக்கு டெல்லி மேலிடத்திலிருந்து ஏற்றுமதி இறக்குமதி லைசென்ஸ் வாங்கிக்கொடுத்திருக்கிறார்கள்.

இதே புதுவை ஆசாமிகள் படுமோசடிப் பேர்வழிகள் என்று வருமான வரி இலாகாவால் பட்டம் சூட்டப் பெற்றவர்கள்,

இந்த மோசடியை அம்பலபடுத்தி பம்பாயிலிருந்து வரும் 'பிளிட்ஸ்' விபரங்கள் வெளியிட்டன. இதன் பிறகே, நாடாளுமன்றத்தில் இப்பிரச்சினை எழுப்பப்பட்டது.

வர்த்தக மந்திரி திரு சட்டோபாத்தியாயா பதிலளித்தார்.

புதுவை மோசடி வியாபாரிகளுக்காக பரிந்துரை வழங்கிய 21 பேரும் காங்கிரஸ் எம் பிக்கள்தாம் என்ற விபரத்தை வெளியிட்டார்

21 பேரில் 19 பேர் தங்களது கையெழுத்துக்கள் அல்ல வென்றும், அவை மோசடி கையெழுத்தென்றும் கூறினர், ஒருவர் மட்டும் தான் அந்த மனுவில் கையெழுத்திட்டது உண்மைதான் என்று ஒப்புக் கொண்டார்.

தோழர் ஜோதிர்மாய்பாசு நாடாளுமன்ற விவாதத்தில் மேலும் ஒரு விபரம் வெளியிட்டார். கையெழுத்திட்ட 21 பேரில் ஒருவர் ரூ 1½ லட்சம் புதுவை ஆசாமியிடமிருந்து லஞ்சம் வாங்கியிருக்கிறார் என்றார்.

நாடாளுமன்றத்தில் இது பற்றி இரண்டு மூன்று தட்வை காரசாரமான விவாதம் நடைபெற்றது. நாடாளுமன்றக்குழுஒன்று இதைப் பற்றி விசாரணை நடத்த வேண்டுமென்று எதிர்க் கட்சியினர் தொடர்ந்து வலியுறுத்தினர்.

இதற்குப் பிரதமர் காந்தி அளித்த பதில் என்ன?

வரம்புக்குட்பட்ட விசாரணை தான் நடத்த முடியுமென்றார். வரம்புக்குட்பட்ட விசாரணை என்பது மத்திய புலனாய்வுதுறை விசாரணையாகும். அதாவது இந்திராவின் மேற்பார்வையிலுள்ள ஒரு இலாகா நடத்தும் விசாரணை. இதன் முடிவு எவ்வாறு இருக்கும் என்பது குறித்து யாருக்கும் சந்தேகம் வேண்டியதில்லை.

இத்துடன் பிரதமர் நின்று விடவில்லை.

நாடாளுமன்றத்தில் மந்திரி சட்டோபாத்தியாயா 21 காங்கிரஸ் எம் பிக்கள் பெயர்களை வெளியிட்டதற்காக அவரைத் தனியாக அழைத்துக் கண்டித்திருக்கிறார். காங்கிரஸ் கட்சிக்கு விரோதமாக மந்திரி நடந்து கொண்டதாகக் கண்டித்திருக்கிறார்.

இதன் பொருள் என்ன?

**ஒரு காங்கிரஸ் மந்திரி, காங்கிரஸ்காரர்கள் ஊழலில் ஈடுபட்டால் அதை வெளியிடக் கூடாது எனபதாகும்.**

இந்திராவின் இந்தத் தலையீடு மீண்டும் நாடாளுமன்றத்தில் உரிமைப் பிரச்சினை என்ற ரூபத்தில் எழுப்பப்பட்டது.

பயன் என்ன?

ராட்சச மெஜாரிட்டி மூலம், அது முறியடிக்கப்பட்டது.

இந்திராவுக்கு மெஜாரிட்டி பலமளித்து அவரது கரத்தைப் பலப்படுத்திய கனவான்களே பாருங்கள். பச்சையாக, அப்பட்டமாக, ஒளிவு மறைவின்றி காங்கிரஸ்காரர்களின் ஊழல் பாதுகாக்கப்படுகிறது. பாம்புக்கு பால் வார்த்தால் அது கடிக்காமலா போகும்?...

—கே. எம்.

---

மதுரைப் பகுதியில்

## விலைவாசி உயர்வு எதிர்ப்பு கூட்டங்கள்

மதுரை, செப். 2—

மதுரைப் பகுதியில் விலைவாசி உயர்வைக் கண்டித்தும், ரூ.2-க்கு ஒரு படி அரிசி வழங்கக்கோரியும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் பொதுக்கூட்டங்கள் நடந்தன,

ஆகஸ்டு 22-ந் தேதியன்று கோ. புதூரில் நடந்த கூட்டத்துக்கு கிளைச் செயலாளர் தோழர் ராமசாமி தலைமை வகித்தார். தோழர்கள் கே.பி. ஜானகியம்மாள் என்.நன்மாறன் ஆகியோர் பேசினர்.

மதுரை குமார் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி கூட்டத்தின் இறுதியில்நடந்தது.

ஆக.28-ந் தேதி கல்பனா தியேட்டர் அருகில் நடந்த கூட்டத்துக்கு தோழர் எஸ். ராமகிருஷ்ணன் தலைமை வகித்தார்.

இக்கூட்டத்தில் தோழர்கள் பாப்பா உமாநாத், கமலம், சிவகாமி அம்மாள், சீனிஅம்மாள், கே.மருதை, டி.சாந்தி ஆகியோர் பேசினர்.

கூட்டத்துக்கு முன் மாணவி ஜீவகலா இயக்கப் பாடல்கள் பாடினார்.

27-ந் தேதியன்று பி. பி. சாவடியில் நடந்த கூட்டத்துக்கு பி.வீரம்மாள் தலைமை வகித்தார்.

தோழர்கள் பாப்பா உமாநாத், டி சின்னத் தேவர், கமலம், சேது அம்மாள், சுசீலா, சோமன், அன்னக்கொடி, ஆகியோர்பேசினர், கூட்டத்துக்குமுன் தங்கராஜ் இயக்கப் பாடல்கள் பாடினர்.

### திருப்புவனம்

திருப்புவனத்தில்விவசாயிகள் சங்கம் சார்பில் அண்மையில் செ. பெரியசாமி தலைமையில் நடந்த கூட்டத்தில் தோழர்கள் வி. ஏ. கருப்புசாமி, கே. சுப்பையா, எம். கணபதி சின்னு, கருப்புராஜா, எஸ். சுப்ரமணி, ராமசாமி ஆகியோர் பேசினர்.

கடந்த 2-ந் தேதியன்று முனிச்சாலையில் ஜெ.எஸ். கிருஷ்ணமூர்த்தி தலைமையில் நடந்த கூட்டத்தில் என்.சங்கரய்யா, எம்.கணபதி, கமலம் பேசினர்,

---

## அஞ்சல் ஊழியர் சங்க விழா

சென்னை ஆக 31—

காஞ்சி கோட்டத்தின் அனைத்திந்திய அஞ்சல் ஊழியர் சங்கம்—மூன்றும் பிரிவின் ஆண்டு விழா, காஞ்சிபுரம் மத்திய அஞ்சலகத்தில் சிறப்பாக நடைபெற்றது. தோழர் டி எ திருமனாச்சாரி தலைமை வகித்தார்.

தோழர்கள் நெலை சீதரன் செங்கை மாவட்ட என் ஜி ஓ யூனியன் செயலாளர், க அ சுந்திர வேலு, மின்வாரிய சி ஐ டி யூ சங்க திட்ட செயலாளர் எம் ஜோதி, அஞ்சலக ஊழியர் ஆர். இராமச்சந்திரன், அஞ்சல் ஊழியர்களின் அமைப்புச் செயலாளர் தமிழ்நாடு வட்டம் ஆகியோர்சிறப்புரையாற்றினர். குறிப்பாக ஏறிவரும் விலைவாசியின் கொடுமையையும் ஊதியமுடக்கச் சட்டத்தின் கேவலத்தைப்பற்றியும் பேசினர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு, மதுரை-625018) அச்சிட்டு, வெளியிடுபவர் ஆசிரியர் கே.முத்தையா.